AL/2019/51/T-I (OLD)



පැරණි නිර්දේශය பழைய பாடத்திட்டம்/ Old Syllabus

OLD



අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

චිත්‍ර කලාව I
சித்திரக்கலை I
Art I

51 T I

07.08.2019 / 0830 – 1140

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
*Three hours*

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

**வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.**

**அறிவுறுத்தல்கள் :**

**சுட்டெண் :** ....................................

* இவ்வினாத்தாள் **இரண்டு** பகுதிகளைக் கொண்டுள்ளது.

**பகுதி I**
- **எல்லா** வினாக்களுக்கும் **இவ்வினாத்தாளிலேயே** விடையளிக்குக.
- ஒவ்வொரு வினாவுக்குமுரிய சரியான விடையைத் தெரிவுசெய்து அதன் **இலக்கத்தை** எதிரே உள்ள **புள்ளிக்கோட்டின்மீது** எழுதுக.

**பகுதி II**
- மூன்று உப பகுதிகளைக் கொண்டது.
- **ஒவ்வோர்** உப பகுதியிலிருந்தும் **ஒரு** வினா வீதம் தெரிவுசெய்து, **மூன்று** வினாக்களுக்கு விடை எழுதுக.

* பகுதி **I,** பகுதி **II** ஆகியவற்றின் விடைத்தாள்களை ஒன்றாக இணைத்துக் கைகளிக்குக.

| பரீட்சகரின் உபயோகத்திற்கு மட்டும் | |
|---|---|
| வினாத்தாள் I | |
| பகுதி | புள்ளி |
| I | |
| II | |
| மொத்தம் | |
| 1ஆம் பரீட்சகர் | 2ஆம் பரீட்சகர் |
| | |

## பகுதி I

● **1** தொடக்கம் **5** வரையான ஒவ்வொரு வினாவுக்கும் **மிகப் பொருத்தமான விடையை A, B, C, D, E** எனப் பெயரிடப்பட்டுள்ள செதுக்கல்களைக் கொண்ட பின்வரும் படங்களிலிருந்து தெரிவுசெய்க.


A


B


C


D


E

**1.** **A** எழுத்தினால் காட்டப்பட்டுள்ள மரச்செதுக்கலைக் காணக்கிடைப்பது,
(1) மரத்தினாலான பழமையானதொரு அம்பலத்திலாகும்.
(2) எம்பக்க கிராமத்தில் உள்ள பழமையானதொரு அம்பலத்திலாகும்.
(3) வயல்வெளியொன்றில் தூணொன்றின்மீது அமைந்துள்ள அம்பலத்திலாகும்.
(4) இறைவனுக்கான பூஜைகள் நடாத்தப்படும் கோயிலொன்றின் அம்பலத்திலாகும்.
(5) பனாவிட்டிய பிரதேசத்திலுள்ள அம்பலத்திலாகும். (.........)

**2.** **B** எழுத்தினால் காட்டப்பட்டுள்ள கைப்பிடிச்சுவர்,
(1) அனுராதபுரத்தில் காணக்கிடைக்கும் செதுக்கல்களைக் கொண்ட அலங்கார நிர்மாணிப்பாகும்.
(2) அனுராதபுரத்தின் ரத்ன பிரசாதயவில் காணக்கிடைக்கும் செதுக்கலாகும்.
(3) அனுராதபுரத்தின் ராணி மாளிகைக்கு அருகில் காணக்கிடைக்கும் கலையம்சம் மிக்கதொரு நிர்மாணிப்பாகும்.
(4) பொலன்னறுவைக் காலத்தில் பாதுகாக்கப்பட்டுள்ள பெறுமதி வாய்ந்ததொரு செதுக்கலாகும்.
(5) பொலன்னறுவை லங்காதிலக விகாரைக்கு முன்னால் உள்ள அலங்காரச் செதுக்கலாகும். (.........)

[பக். 2 ஐப் பார்க்க

3. **C** எழுத்தினால் காட்டப்பட்டுள்ள செதுக்கலினால் சித்திரிக்கப்படுவது,
(1) விலங்குகள் பற்றிய ஜாதகக் கதையொன்றாகும்.
(2) எண்ணக்கருரீதியான பண்புகளைவிட யதார்த்தரீதியான பண்புகளாகும்.
(3) ஜாதகக் கதையொன்றுடன் தொடர்புடைய அமராவதிச் செதுக்கலாகும்.
(4) பாருத் கல்வேலிச் செதுக்கல்களில் காணக்கிடைக்கும் ஜாதகக் கதையொன்றாகும்.
(5) வட்ட வடிவமான தளமொன்றின்மீது நிர்மாணிக்கப்பட்ட மென்புடைப்புச் செதுக்கலாகும். (.........)

4. **D** எழுத்தினால் காட்டப்பட்டுள்ள செதுக்கல்,
(1) இந்தியாவின் எல்லோராவில் காணக்கிடைப்பதாகும்.
(2) இந்தியாவின் கடற்கரையோர கற்பாறையொன்றில் மென்புடைப்பாகச் செதுக்கப்பட்டுள்ளதாகும்.
(3) கங்கை நதியின் தோற்றத்தைக் குறிக்கும் விதத்தில் மகாபலிபுரக் கடற்கரையோர கற்பாறையில் செதுக்கப்பட்டுள்ளதாகும்.
(4) நிலையான கற்பாறையொன்றில் செதுக்கப்பட்ட கற்பனைக் கதையாகும்.
(5) இறைவன், மனித, விலங்கு உருவங்களைக் கொண்டதாக கற்பாறையொன்றில் செதுக்கப்பட்டுள்ளதாகும். (.........)

5. **E** எழுத்தினால் காட்டப்பட்டுள்ள தூண் செதுக்கலினால் சித்திரிக்கப்படுவது,
(1) கிரேக்கர்கள் தமது யுத்த வெற்றிகளைக் கொண்டாடுதலாகும்.
(2) உரோமர்கள் தமது யுத்த வெற்றிகளைக் கொண்டாடுதலாகும்.
(3) உரோமர்களுக்கும் கிரேக்கர்களுக்கும் இடையிலான யுத்தக் காட்சிகளாகும்.
(4) உரோமப் பேரரசனின் வாழ்க்கைத் தகவல்களாகும்.
(5) உரோமர்கள், டேசியர்களுக்கு எதிராகப் போர்செய்த காட்சியாகும். (.........)

● **6** தொடக்கம் **10** வரையான ஒவ்வொரு வினாவுக்கும் **மிகப் பொருத்தமான விடையை** 1 - 7 வரையில் பெயரிடப்பட்டுள்ள பின்வரும் ஓவியங்களிலிருந்து தெரிவுசெய்க.


1


2


3


4


5


6


7

6. பாரதத்தில் பிரசித்திபெற்றதொரு கருப்பொருளைச் சித்திரிக்கும் ஓவியம் எது?
(1) 2 (2) 3 (3) 4 (4) 5 (5) 6 (.........)

7. இலங்கையின் நவீன கலையின் அருபவாத கலைக்குருகுலத்தின் கலைஞரின் ஓவியம் எது?
(1) 1 (2) 2 (3) 3 (4) 5 (5) 7 (.........)

8. கனவடிவவாதக் கலை நுட்பங்களைக் கொண்ட இலங்கை ஓவியம் எது?
(1) 1 (2) 2 (3) 3 (4) 5 (5) 7 (.........)

9. ஐரோப்பிய கனவடிவவாத, மிகையதார்த்தவாத ஓவியங்கள் முறையே யாவை?
(1) 2, 3 (2) 3, 4 (3) 4, 5 (4) 5, 6 (5) 6, 7 (.........)

10. 43 ஆவது குழுக் கலைஞர்களின் ஓவியங்கள் யாவை?
(1) 1, 2, 3 (2) 2, 3, 7 (3) 3, 4, 5 (4) 3, 5, 7 (5) 3, 6, 7 (.........)

[பக். 3 ஐப் பார்க்க

● **11** தொடக்கம் **15** வரையான ஒவ்வொரு வினாவுக்கும் **மிகப் பொருத்தமான விடையை F, G, H, I, J** எனப் பெயரிடப்பட்டுள்ள பின்வரும் ஓவியங்களிலிருந்து தெரிவுசெய்க.


F


G


H


I


J

**11.** **F** எழுத்தினால் காட்டப்பட்டுள்ள 'நடனமாது' (சந்திரலேகா / லோரேத்) எனப் பெயரிடப்பட்டுள்ள இவ்வோவியத்தை நிர்மாணித்தவர் யார்?
(1) ஜே. டீ. ஏ. பெரேரா (2) ஏ. சி. ஜீ. எஸ். அமரசேகர (3) ரியூடர் ராஜபக்ஷ
(4) டேவிட் பேன்டர் (5) ஹரி பீரிஸ் (.........)

**12.** **G** எழுத்தினால் காட்டப்பட்டுள்ள 'மகாமாயாதேவியின் கனவு' என்ற சித்திரத்தில் காணக்கிடைப்பது,
(1) ஐரோப்பிய சாஸ்திராலய கலைப்பண்புகளாகும்.
(2) ஐரோப்பிய யதார்த்தவாத நுட்பமுறைகளாகும்.
(3) மனப்பதிவுவாத முறைமை, இந்திய கலைப்பாணி ஆகியவற்றின் கலப்பாய் அமைந்ததொரு பண்பாகும்.
(4) கீழைத்தேய கலை எண்ணக்கருக்களை அடிப்படையாகக் கொண்ட பாணியாகும்.
(5) இந்திய கலைக் கோட்பாடுகளைப் பின்பற்றியதொரு பாணியாகும். (.........)

**13.** **H** எழுத்தினால் காட்டப்பட்டுள்ள 'பாரதமாதா' எனப்படும் ஓவியத்தை வரைந்தவர் யார்?
(1) இந்திய மறுமலர்ச்சி இயக்கத்தைப் பிரதிநிதித்துவப்படுத்திய நந்தலால் போஸ்
(2) வங்காள குருகுலத்தின் ராஜா ரவிவர்மா
(3) சமகால ஓவிய மரபின் முன்னோடியான அபனீந்திரநாத் தாகூர்
(4) மனப்பதிவுவாத கலைப் பண்புகளை அடிப்படையாகக் கொண்ட நாராயணசுவாமி
(5) இந்திய கிராமியக்கலை மரபின் செல்வாக்கிற்குட்பட்ட ஜெமினிரோய் (.........)

**14.** **I** எழுத்தினால் காட்டப்பட்டுள்ள 'ராதாவின் மார்பளவு ஓவியம்',
(1) சுதேசிய இந்து இலக்கிய எண்ணக்கருக்கள் ஓவியமாக்கப்பட்டுள்ளமையாகும்.
(2) பிரதேசரீதியான ஓவிய மரபுகளை அடிப்படையாகக் கொண்ட நிர்மாணிப்பாகும்.
(3) இயற்கைத்தன்மையைவிட யதார்த்தத் தன்மைக்கு முக்கியத்துவம் வழங்கிய கலைப்பாங்கானதொரு நிர்மாணிப்பாகும்.
(4) கற்பனையொன்று வெளிப்பாட்டுப்பாங்கில் ஓவியமாக்கப்பட்டுள்ளமையாகும்.
(5) பெண்மையின் வனப்பை அலங்காரத்துடன் வெளிப்படுத்தியுள்ளமையாகும். (.........)

**15.** **J** எழுத்தினால் காட்டப்பட்டுள்ள ஓவியத்தை வரைந்த ஓவியர் பற்றிய சரியான கூற்று யாது?
(1) அசைவுடன்கூடிய சந்தர்ப்பங்களை சித்திரிப்பதில் திறமைமிக்கவராவார்.
(2) வேகமான தூரிகைத் தடங்களை தனது நிர்மாணிப்புக்களில் சேர்த்த கலைஞராவார்.
(3) ஒன்றுக்கொன்று வேறுபட்ட வர்ணங்களின் சேர்க்கையில் திறமைமிக்கவராவார்.
(4) பின்புல வெளிச்சித்திரிப்புக்காக குறைந்தளவு முக்கியத்துவம் வழங்கிய கலைஞராவார்.
(5) பல்வேறு கோணங்களில் அவதானம் செலுத்துவதில் திறமை மிக்கவராவார். (.........)

[பக். 4 ஐப் பார்க்க

● **16** தொடக்கம் **20** வரையான ஒவ்வொரு வினாவுக்கும் **மிகப் பொருத்தமான விடையை K, L, M, N, O** எனப் பெயரிடப்பட்டுள்ள பின்வரும் சிலைகளிலிருந்து தெரிவுசெய்க.


K


L


M


N


O

**16.** **K** எழுத்தினால் காட்டப்பட்டுள்ள சிலையைக் காணக்கிடைப்பது,
(1) கடலாதெனிய விகாரையிலாகும். (2) தம்புள்ள விகாரையிலாகும்.
(3) லங்காதிலக விகாரையிலாகும். (4) தெகல்தொறுவ விகாரையிலாகும்.
(5) மெதவல விகாரையிலாகும். (.........)

**17.** **L** எழுத்தினால் காட்டப்பட்டுள்ளது,
(1) பொலன்னறுவையிலுள்ள சிவன் கோயிலொன்றிலிருந்து கிடைக்கப்பெற்ற சிவன் பார்வதி சிலையாகும்.
(2) சோழர் காலத்திற்குரிய தென்னிந்தியச் சிலையாகும்.
(3) தென்னிந்தியாவிலிருந்து கொண்டுவரப்பட்ட சிவன் பார்வதி சிலையாகும்.
(4) இலங்கையின் உலோக வார்ப்புக் கலையின் பெறுமதிவாய்ந்ததொரு நிர்மாணிப்பாகும்.
(5) ராஜேந்திர சோழ மன்னனின் காலத்தில் நிர்மாணிக்கப்பட்டதொரு சிலையாகும். (.........)

**18.** **M** எழுத்தினால் காட்டப்படுவது,
(1) மொஹஞ்சதாரோவில் கண்டெடுக்கப்பட்ட பூசகர் உருவமாகும்.
(2) ஹரப்பா நகரில் கண்டெடுக்கப்பட்ட பூசகர் உருவமாகும்.
(3) சிந்துவெளியில் கண்டெடுக்கப்பட்ட மொங்கோலிய இனத்தவரின் உருவமாகும்.
(4) பூசகர் ஒருவரைச் சித்திரிக்கும் சிந்துவெளிச் சிலையாகும்.
(5) சிந்துவெளியில் கண்டெடுக்கப்பட்ட அருப உருவச்சிலையாகும். (.........)

**19.** **N** எழுத்தினால் காட்டப்பட்டுள்ள முண்டச்சிலை,
(1) மௌரியர் காலத்தில் நிர்மாணிக்கப்பட்ட, அசோக மன்னனைச் சித்திரிப்பதாகும்.
(2) மதுரா பிரதேசத்தில் கிடைக்கப்பெற்ற அரச பரம்பரையைச் சார்ந்த ஒருவரின் சிலையாகும்.
(3) காந்தார தேசத்தில் கிடைக்கப்பெற்ற கனிஸ்க மன்னனைச் சித்திரிக்கும் ஓர் படைப்பாகும்.
(4) மதுரா குருகுலத்திற்குரிய கனிஸ்க மன்னனின் சிலையாகும்.
(5) சாதவாகனர் கால படைத்தளபதி ஒருவரைச் சித்திரிப்பதாகும். (.........)

**20.** **O** எழுத்தினால் காட்டப்பட்டுள்ள வீனஸ் சிலை,
(1) பிரக்சி டெலசால் நிர்மாணிக்கப்பட்டதாகும்.
(2) கிரேக்கர்களால் நிர்மாணிக்கப்பட்டதாகும்.
(3) ஹெலனிஸ்டிக் காலத்திற்குரிய அதி உன்னத சிலையாகும்.
(4) பீடியாஸினால் நிர்மாணிக்கப்பட்ட தேவதையொன்றின் சிலையாகும்.
(5) பழமையுகத்தில் கிரேக்கத்தில் உருவான உன்னதமானதொரு நிர்மாணிப்பாகும். (.........)

● **21** தொடக்கம் **25** வரையான ஒவ்வொரு வினாவுக்கும் **மிகப் பொருத்தமான விடையைத்** தெரிவுசெய்க.

**21.** ஏதேனும் பணியொன்றை மேற்கொள்ளும் நிறுவனமொன்றுக்குப் பொருத்தமான இலச்சினையொன்றை நிர்மாணிக்கும்போது,
(1) அதிக அலங்காரத் தோற்றத்தைக் கொண்டதாக வடிவங்களையும் வர்ணங்களையும் பயன்படுத்துதல் முக்கியமாகும்.
(2) கவர்ச்சிகரமான தன்மையையும் சிறந்த பூரணப்பாட்டையும் கொண்டிருத்தல் வேண்டும்.
(3) கிரபிக் கலைக் கோட்பாடுகளுக்கமைவானதாக இருத்தல் வேண்டும்.
(4) கருத்து வெளிப்படும் விதத்தில் குறியீட்டடிப்படையில் வடிவங்களையும் வர்ணங்களையும் பயன்படுத்துதல் வேண்டும்.
(5) சுவரொட்டிச் சாயத்தை இருபரிமாண முறையில் பயன்படுத்துதல் வேண்டும். (.........)

**22.** ஏதேனுமொரு கருப்பொருளை அருப நோக்கில் ஒருங்கிணைக்கும்போது கவனம் செலுத்தவேண்டியது,
(1) யதார்த்தபூர்வமான தொகுப்புக் கோட்பாடுகளைப் பயன்படுத்துவதிலாகும்.
(2) வர்ணங்களை இருபரிமாண அடிப்படையில் பயன்படுத்துவதிலாகும்.
(3) வடிவங்களின் ஒழுங்கமைப்பின்போது உயிர்ப்பான கோடுகளைப் பயன்படுத்துவதிலாகும்.
(4) கருப்பொருளுக்குப் பொருத்தமான விதத்தில் ஆக்கபூர்வமான வடிவங்களைப் பயன்படுத்துவதிலாகும்.
(5) பயன்படுத்தும் பாணிக்கு இணக்கமான கோடுகள், வடிவங்கள், வர்ணங்கள் ஆகியவற்றைப் பயன்படுத்துவதிலாகும். (.........)

[பக். 5 ஐப் பார்க்க

**23.** வீட்டு அலங்கரிப்புக்காக கழிவுப் பொருட்களைப் பயன்படுத்தி, சிலையொன்றை நிர்மாணிக்கும்போது கவனத்திற் கொள்ளவேண்டியது,
(1) விசித்திரமான தன்மையையும் வனப்புமிகு தன்மையையும் பேணுவதை ஆகும்.
(2) நுகர்வோரின் விருப்பங்களுக்கேற்றவாறு முழுமைப்படுத்தலை ஆகும்.
(3) மூலப்பொருட்களைத் தமது விருப்பத்திற்கேற்ப பயன்படுத்துதலை ஆகும்.
(4) மூலப்பொருட்களின் இயல்புகளைவிட நிர்மாணத்தின் தேவையை ஆகும்.
(5) பயன்பாட்டிற்கு எடுக்கும் மூலப்பொருட்களின் தன்மைகளையாகும். (.........)

**24.** கட்புலக் கலையின் யதார்த்தச் சித்திரிப்பு (Realism) என்பது,
(1) சாஸ்திராலய அடிப்படை விதிகளைப் பின்பற்றுதலாகும்.
(2) தூரதரிசனக் கோட்பாடுகளைச் சரியாகப் பயன்படுத்துதலாகும்.
(3) விருத்தியுற்ற அழகியல் கோட்பாடுகளுக்கமைய மனித உருவங்களைச் சித்திரித்தலாகும்.
(4) இயற்கையில் காணப்படும் உயிருள்ள, உயிரற்றவற்றின் பண்புகளை உள்ளவாறே சித்திரித்தலாகும்.
(5) அழகியல் கோட்பாடுகளுக்கமைய அனைத்தையும் சித்திரித்தலாகும். (.........)

**25.** கணினியொன்றின் துணையுடன் அழைப்பிதழ் ஒன்றை நிர்மாணிக்கும்போது அத்தியாவசியமானது,
(1) அடிப்படை மாதிரியை வர்ண ஓவியமொன்றாக வரைந்து கொள்ளலாகும்.
(2) கிரபிக் நிர்மாணிப்புகளுக்குப் பொருத்தமான மென்பொருளொன்றைத் தெரிவுசெய்தலும் அதன் பயன்பாடு பற்றிய அறிவுமாகும்.
(3) நிர்மாணிப்புக்குத் தேவையான வரைபடங்களையும் எழுத்துக்களையும் தெரிவுசெய்தலாகும்.
(4) கருத்து வெளிப்பாடு ஏற்படும் விதமாக கணினியில் புதிய மாதிரியொன்றைக் கட்டியெழுப்பிக் கொள்ளலாகும்.
(5) அழைப்பிதழின் பிரதியொன்றை கணினிக்கு உள்ளீடு செய்து மேலதிக பிரதிகளைப் பெற்றுக்கொள்ளலாகும். (.........)

● **26** தொடக்கம் **30** வரையான ஒவ்வொரு வினாவுக்கும் **மிகச்சரியான விடையைத்** தெரிவுசெய்க.

**26.** பின்வருவனவற்றுள் கண்டிக் கால கலைஞர்கள் பற்றிய சரியான கூற்று எது?
(1) நீலகம ஓவியப் பரம்பரைக் கலைஞர்களால் தம்புள்ள விகாரையின் ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன.
(2) கண்டிய ஓவியங்கள் பலவற்றை சித்திர நைத்தே என்ற கலைஞரே வரைந்துள்ளார்.
(3) தெகல்தொருவ விகாரையின் அனைத்து ஓவியங்களையும் தெவரகம்பொல சில்வத்தன என்ற கலைஞர் வரைந்துள்ளார்.
(4) தேவேந்திர மூலாச்சாரி கட்டடக்கலையைவிட ஓவியக்கலையில் கைத்தேர்ந்தவராவார்.
(5) தெல்மட மூலாச்சாரியார் கண்டிக் காலத்தில் வாழ்ந்த அதிசிறந்த ஓவியராவார். (.........)

**27.** அனுராதபுர மகாமெவுனா பூங்காவில் காணத்தக்க தூபிகளுள்,
(1) துட்டகைமுனு மன்னனால் அமைக்கப்பட்ட ருவன்வெலிசாய இலங்கையிலேயே மிகப் பெரிய தூபியாகும்.
(2) வலகம்பா மன்னனால் கட்டுவிக்கப்பட்ட அபயகிரி தூபி மகாமெவுனா பூங்காவில் முதன் முதலில் அமைக்கப்பட்ட தூபியாகும்.
(3) மகாசேன மன்னனால் அமைக்கப்பட்ட ஜேதவனாராம தூபி செங்கற்களினாலான உலகின் மிக உயர்ந்த கட்டடக்கலை நிர்மாணிப்பாகும்.
(4) தேவநம்பியதீசனால் அமைக்கப்பட்ட தூபாராம மணிவடிவில் அமைந்த ஒரேயொரு தூபியாகும்.
(5) துட்டகைமுனு மன்னனால் முதன்முதலில் அமைக்கப்பட்ட ருவான்வெலிசாயவிற்குப் பதிலாக சத்தாதிஸ்ஸ மன்னனால் அமைக்கப்பட்ட தூபியே இன்று காணக்கூடியதாக உள்ளது. (.........)

**28.** பாரதத்தில் குப்தர் ஆட்சிக் காலத்தில் ஆரம்பிக்கப்பட்ட கலைவகைகளின் காரணமாக,
(1) பௌத்த கலை நிர்மாணிப்புகள் புதியதொரு பாதையை நோக்கிச் சென்றன.
(2) மதுரா கலை போஷிக்கப்பட்டதுடன் புதியதொரு கலைமரபு உருவாகியது.
(3) பாரதத்தின் பௌத்த கலை நிர்மாணிப்புகளின் பொற்காலம் தோற்றம் பெற்றது.
(4) கலை நிர்மாணிப்புகள் யதார்த்தவாதத்திலிருந்து விடுபட்டு விழுமியரீதியானவையாக மாற்றமுற்றன.
(5) பௌத்த கலை வெளிநாட்டுப் பண்புகளிலிருந்து விடுபட்டு சுதேசியத்தன்மைக்கு மாற்றம் பெற்றது. (.........)

**29.** எட்வாட் மனேயின் 'புல் தரையில் விருந்து' என்ற ஓவியம் சலோன் அமைப்பினால் நிராகரிக்கப்பட்டமைக்கான காரணம்,
(1) அங்கு காணப்பட்ட புனிதத் தன்மைக்கு பாதிப்பு ஏற்பட்டமையாகும்.
(2) திறந்த வெளி மதியவுணவு உபசரிப்பைக் கருப்பொருளாகக் கொண்டிருந்தமையாகும்.
(3) உணவு உட்கொள்ளும் மரபுரீதியான பழக்கங்கள் அவமதிப்பிற்கு இலக்கானமையாகும்.
(4) பெண் ஒருவர் நிர்வானமாக வரையப்பட்டமையாகும்.
(5) நடைமுறையில் இருந்த மரபுரீதியான வரையறைகளுக்கு ஏற்புடையதாக இல்லாதிருந்தமையாகும். (.........)

[பக். 6 ஐப் பார்க்க

**30.** 'கா' எண்ணக்கரு என்பது யாது?
(1) மரணத்தின் பின்னரான வாழ்வாகும்.
(2) சூரியனே ஒரேயொரு கடவுள் என்பதாகும்.
(3) வாழும் மனிதருள் காணப்படும் ஆத்மாவைக் குறிப்பதாகும்.
(4) பிரிந்த ஆத்மாக்களுக்குப் பூஜைகள் நடத்துதல் ஆகும்.
(5) நாட்டின் முன்னேற்றத்திற்காக இறந்தவர்களை வழிபடுதலாகும். (.........)

● **31** தொடக்கம் **35** வரையான ஒவ்வொரு வினாவுக்கும் **மிகப் பொருத்தமான விடையை** அதற்கு முன்னாலுள்ள கட்டடக்கலை நிர்மாணிப்பை அடிப்படையாகக்கொண்டு தெரிவுசெய்க.

**31.** இங்கு காட்டப்பட்டுள்ளது,



(1) தென்னிந்தியக் கட்டடக்கலை பண்புகளைச் சித்திரிக்கும் கோயிலாகும்.
(2) கம்பளைக் காலத்தில் நிர்மாணிக்கப்பட்ட இந்துக் கோயிலாகும்.
(3) திராவிடக் கலைஞரொருவரின், கருங்கற்களினாலான நிர்மாணிப்பாகும்.
(4) கம்பளைக் காலத்தில் திராவிடக் கட்டடக்கலைப் பண்புகளுக்கமைய நிர்மாணிக்கப்பட்ட பௌத்த விகாரையாகும்.
(5) கம்பளைக் காலத்தில் பௌத்த விகாரையாக மாற்றமடைந்த இந்துக் கோயிலாகும். (.........)

**32.** எகிப்தில் காணத்தக்க இக்கட்டடக்கலை நிர்மாணிப்பு,



(1) எகிப்தின் நைல் நதிக்கரையில் காணக்கிடைக்கும் பிரமிட்டுக்களுள் ஒன்றாகும்.
(2) கீசா பீடபூமியில் நிர்மாணிக்கப்பட்டுள்ள காப்ரே பிரமிட் ஆகும்.
(3) எகிப்திய முக்கிய பிரமிட்டுகளுள் மிகப்பெரியதாகும்.
(4) எகிப்தின் முக்கிய முப்பிரமிட்டுகளுள் ஒன்றான குபு பிரமிட் ஆகும்.
(5) ஸ்பின்ஸ் சிலையைக் கொண்டதாக நிர்மாணிக்கப்பட்ட ஒரேயொரு பிரமிட் ஆகும். (.........)

**33.** இங்கு காட்டப்பட்டுள்ளது,



(1) கிரேக்கத்தின் பிரமாண்டமான நினைவுக் கட்டடமாகும்.
(2) கிரேக்கத்தின் அதியுன்னத நினைவுக்கட்டடமான பொசிடன் தேவாலயமாகும்.
(3) கிரேக்க கடவுளர்களுக்காக அமைக்கப்பட்ட மிகப்பெரிய தேவாலயமாகும்.
(4) எகிப்திய செல்வாக்குடன் கிரேக்கத்தில் அமைக்கப்பட்ட தேவாலயமாகும்.
(5) கிரேக்க கட்டடக்கலையின் பெருமையைப் பறைசாற்றும் பாத்தினன் தேவாலயமாகும். (.........)

**34.** இங்கு காட்டப்பட்டுள்ளது,



(1) பாரதத்தில் பௌத்த நினைவுக்கட்டடமாக முதன்முதலில் நிர்மாணிக்கப்பட்ட தூபியாகும்.
(2) அசோக மன்னன் பாரதத்தில் நிர்மாணித்த ஒரேயொரு தூபியாகும்.
(3) அசோக மன்னனால் நிர்மாணிக்கப்பட்ட சாஞ்சி தூபித்தொகுதியின் முக்கிய தூபியாகும்.
(4) வீதிஷா நகர அரசியால் அசோக மன்னனைக் கொண்டு கட்டுவிக்கப்பட்ட தூபியாகும்.
(5) புனித தாதுக்களைக் கொண்டதாக அசோக மன்னனால் நிர்மாணிக்கப்பட்ட தூபியாகும். (.........)

**35.** இங்கு காட்டப்பட்டுள்ள கட்டடக்கலை நிர்மாணிப்பு,



(1) பொலன்னறுவை புனித பிரதேசத்தில் காணத்தக்க முக்கிய பௌத்த கட்டடமாகும்.
(2) இலங்கையிலுள்ள தூபிமனைகளுள் அலங்காரம்மிக்க நிர்மாணிப்பாகும்.
(3) மெதிரிகிரிய விகாரைத் தொகுதியில் அமைந்துள்ள தூபிமனையாகும்.
(4) பொலன்னறுவை ஆலாகன பிரிவெனா சூழலில் காணத்தக்கதாகும்.
(5) பொலன்னறுவை தலதா மாளிகையில் அமைந்துள்ள அலங்காரம் மிக்க தூபிமனையாகும். (.........)

[பக். 7 ஐப் பார்க்க

● **36** தொடக்கம் **40** வரையான ஒவ்வொரு வினாவுக்கும் **மிகப் பொருத்தமான விடையை** பின்வரும் ஓவியத்தைப் பயன்படுத்தித் தெரிவுசெய்க.



**36.** இவ்வோவியத்தைக் காணத்தக்க இடம் எது?
(1) மெதவல தூண் விகாரையின் சிலைமனையாகும்.
(2) தம்புள்ள ரஜமஹா விகாரையாகும்.
(3) தெகல்தொறுவ ரஜமஹா விகாரையாகும்.
(4) கதளுவ பூர்வாராம விகாரையாகும்.
(5) பொலன்னறுவை திவங்க சிலைமனையாகும். (………)

**37.** இவ்வோவியத்தினால் சித்திரிக்கப்படும் ஜாதகக்கதை யாது?
(1) வெஸ்ஸந்தர (2) ஊரக (3) சத்து பக்த
(4) சுத்த சோம (5) மஹா சீலவ (………)

**38.** இவ்வோவியத்தினால் சித்திரிக்கப்படும் ஜாதகக் கதையின் கருப்பொருள் யாது?
(1) விவசாயத்தில் வயலை உழுவதன் முக்கியத்துவம்
(2) வினைத்திறனுடன் தனது பணியில் ஈடுபடும் ஒருவர்
(3) வாழ்வின் நிச்சயமற்ற தன்மையை ஆர்வத்துடன் சகித்துக்கொள்ளல்
(4) ஏதோ ஒன்றைக் கூற முற்படும் விவசாயி ஒருவர்
(5) இலட்சியத்துடன் வாழ்வதன் முக்கியத்துவம் (………)

**39.** இவ்வோவியத்தின் ஒருங்கிணைப்புக் கோலத்திற்கமைய காணத்தக்கது,
(1) கிராமியக் கலை மரபுகளின் செல்வாக்காகும்.
(2) மத்திய கண்டியகால ஓவியக்கலைப் பண்புகளாகும்.
(3) தாழ்நாட்டு ஓவியக்கலைப் பண்புகளாகும்.
(4) மலைநாட்டு, தாழ்நாட்டு ஓவியக்கலைப் பண்புகளாகும்.
(5) சுதேசிய ஓவியக்கலையில் இணைந்த மேலைத்தேய கலைக் கோட்பாடுகளாகும். (………)

**40.** பின்வருவனவற்றில் இவ்வோவியம் பற்றிய சரியான கூற்றைத் தெரிவுசெய்க.
(1) கலைப்பாங்கான மரபும் யதார்த்த தன்மையும் ஒன்றிணைத்துக் காட்டப்பட்டுள்ளன.
(2) ஆக்கபூர்வமான கூறுகள் காட்டப்பட்டுள்ள தன்மையினால் கலைப்பாங்கான ஓவிய மரபுக்கு உரிமை கோருகிறது.
(3) அசைவையும் செயற்பாட்டுத் தன்மையையும் காட்டுவதற்கு எடுக்கப்பட்ட முயற்சியினால் கலைத்திறன்கள் வெளிப்படையாகத் தெரிகின்றன.
(4) சம்பவச் சித்திரிப்பின்போது முன்னணியும் பின்னணியும் சிறப்பான விதத்தில் இணைக்கப்பட்டுள்ளமை ஓவியத்தின் அலங்காரத் தன்மையை மிகைப்படுத்துகின்றது.
(5) மிகச்சிக்கலான சமய எண்ணக்கருவொன்று பக்தியை ஏற்படுத்தும் விதமாக காலத்துக்கேற்றவாறு கட்புல ஊடகத்தினால் முன்வைக்கப்பட்டுள்ளது. (………)

[பக். 8 ஐப் பார்க்க

**

පැරණි නිර්දේශය/ பழைய பாடத்திட்டம்/ Old Syllabus

OLD



අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

චිත්‍ර කලාව I
சித்திரக்கலை I
Art I

51 T I

## பகுதி II

* இப்பகுதி **மூன்று** உப பகுதிகளைக் கொண்டுள்ளது.
* ஒவ்வொரு உப பகுதியிலிருந்தும் **ஒவ்வொரு** வினா வீதம் தெரிவுசெய்து, **மூன்று** வினாக்களுக்கு விடை எழுதுக.
(தேவையான இடங்களில் பரும்படிப் படங்களைப் பயன்படுத்துதல் உங்களுக்கு அனுகூலமாக அமையும்.)

### பகுதி 'அ'
### (சித்திரக்கலையின் மதிப்பீடும் இரசனையும் - இலங்கை)

**1.** பொலன்னறுவையின் கட்டடக்கலை பற்றி நோக்கும்போது இந்து சமயப் பண்புகளை ஈர்த்துக் கொண்ட பௌத்த அடையாளங்களைக் கொண்ட நிர்மாணிப்புகளைக் காணக்கூடியதாயுள்ளது.

(i) பொலன்னறுவைக் கால தூபிகள் **நான்கைப்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(ii) பொலன்னறுவை தூபாராம சிலைமனையின் கட்டடக்கலைப் பண்புகள் **மூன்றைச்** சுருக்கமாக விவரிக்குக. (06 புள்ளிகள்)

(iii) பொலன்னறுவையின் முதலாம், இரண்டாம் சிவாலயங்களின் கட்டடக்கலைப் பண்புகள் பற்றி மதிப்பிடுக. (10 புள்ளிகள்)

**2.** இலங்கையின் சமகால ஓவியக்கலை பல்வேறு கலைநுட்பங்களை எடுத்துக்காட்டுவதாகும்.

(i) இலங்கை கலைச் சங்கத்தின் முன்னோடிக் கலைஞர்கள் **இருவரையும்** அவர்களின் ஓவியங்கள் ஒவ்வொன்றையும் குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(ii) இலங்கையின் சமகால ஓவியக் கலைஞரான திஸ்ச ரணசிங்கவின் கலைப்படைப்புகள் பற்றிச் சுருக்கமாக விளக்குக. (06 புள்ளிகள்)

(iii) திரித்துவ இறைபீடத்தின் ஓவியங்களை அடிப்படையாகக் கொண்டு டேவிட் பேண்டரின் சமயச்சார்புடைய ஓவியப்படைப்புகள் தொடர்பாக மதிப்பிடுக. (10 புள்ளிகள்)

### பகுதி 'ஆ'
### (சித்திரக்கலையின் மதிப்பீடும் இரசனையும் - இந்தியா)

**3.** அஜந்தா, எல்லோரா ஆகியன நிலையான கற்பாறைகளில் ஓவியங்கள் நிர்மாணிக்கப்பட்ட கலைநிலையங்கள் ஆகும்.

(i) எல்லோராவில் காணத்தக்க பௌத்த சமயக் குகைகள் **இரண்டையும்** இந்து சமயக் குகைகள் **இரண்டையும்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(ii) எல்லோராவில் காணக்கிடைக்கும் 'இராவணன் கைலாய மலையைப் பெயர்த்தல்' எனும் செதுக்கல் பற்றிச் சுருக்கமாக விவரிக்குக. (06 புள்ளிகள்)

(iii) அஜந்தா குகை ஓவியங்களிடையே காணப்படும் குப்தர் காலத்திற்குரிய ஓவியங்களில் காணத்தக்க விசேட பண்புகள் பற்றி விளக்குக. (10 புள்ளிகள்)

[பக். 09 ஐப் பார்க்க

**4.** இந்தியாவின் சமகால ஓவியர்களின் கலைப்படைப்புகளினூடாக இந்திய சமூக வாழ்வியல் பற்றி அறிந்துகொள்ளக்கூடியதாயுள்ளது.

(i) நந்தலால் போஸ், ஜெமினி ரோய் ஆகியோரின் ஓவியங்கள் **இரண்டு** வீதம் குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(ii) மேலே (i) இல் குறிப்பிட்ட எதேனுமொரு ஓவியம் பற்றிச் சுருக்கமாக அறிமுகம் செய்க. (06 புள்ளிகள்)

(iii) "அம்ரிதா ஷேர்கில்லின் கலைப் படைப்புகளின் மூலம் அக்கால இந்திய சமூகம் சிறப்பான விதத்தில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது." ஆராய்க. (10 புள்ளிகள்)

## பகுதி 'இ'

## (சித்திரக்கலையின் மதிப்பீடும் இரசனையும் - ஐரோப்பா)

**5.** ஐரோப்பிய ஓவியர்களினதும் சிற்பக் கலைஞர்களினதும் கலைப்படைப்புகளில் காலமாற்றத்தின் பண்புகள் தெளிவாக வெளிப்படுகின்றன.

(i) மிகையதார்த்தவாதக் கலைஞர்கள் **நால்வரைக்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(ii) சிற்பக் கலைஞரான ஹென்றிமூவரின் படைப்புக்களில் காணத்தக்க பண்புகள் **மூன்றினைச்** சுருக்கமாக விவரிக்குக. (06 புள்ளிகள்)

(iii) அருபவாத ஓவியக் கலைஞர்கள் உருவாவதில் செல்வாக்குச் செலுத்திய பின்புலம், படைப்புகளின் விசேட தன்மைகள் என்பன பற்றி மதிப்பிடுக. (10 புள்ளிகள்)

**6.** கிரேக்கமும் உரோமும் பெருமளவிலான கட்டடக்கலை நிர்மாணிப்புகளைக் கொண்ட முழுமையான கலைநிலையங்கள் ஆகும்.

(i) கிரேக்க கட்டடக்கலையில் பயன்படுத்தப்படும் தூண் வகைகள் **இரண்டைக்** குறிப்பிட்டு, அவை ஒவ்வொன்றுக்கும் ஒவ்வோர் உதாரணம் தருக. (04 புள்ளிகள்)

(ii) கிரேக்க தேவாலயங்களில் தூண்கள் பயன்படுத்தப்பட்டுள்ள விதம் பற்றிச் சுருக்கமாக விவரிக்குக. (06 புள்ளிகள்)

(iii) உரோம கட்டடக்கலையின் அதியுன்னத கூறான உரோம வெற்றி வளைவுகள் பற்றி விளக்குக. (10 புள்ளிகள்)

* * *

පැරණි නිර්දේශය/ பழைய பாடத்திட்டம்/ Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

චිත්‍ර කලාව II
சித்திரக்கலை II
Art II

51 T II

09.08.2019 / 0830 – 1140

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

**வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.**

**அறிவுறுத்தல்கள் :**

- உமது **சுட்டெண்ணைச்** சித்திரம் வரையும் தாளின் **மறுபக்கத்தில்** தெளிவாக எழுதுக.
- வர்ணச் சித்திரம் வரைவதற்காக உமக்கு வழங்கப்பட்டுள்ள விசேட **வரைதல் தாளைப்** (Drawing paper) பயன்படுத்துக. வேறு எந்தவொரு சித்திரத்தையோ பரும்படிக் குறிப்பையோ வரையத் தேவையில்லை.
- விடைத்தாளைப் பரீட்சை மேற்பார்வையாளரிடம் கையளிக்கும்போது அது நன்கு உலர்ந்திருத்தல் முக்கியமானது. ஈரமான சித்திரங்கள் ஒன்றுடன் ஒன்று ஒட்டிக்கொள்வதற்குச் சந்தர்ப்பம் உள்ளமையினால், அது உங்களுக்குப் பாதகமானதாக அமையலாம்.

## இயற்கைக் கற்றலும் அசையாப் பொருள்கூட்டச் சித்திரமும்

பின்வரும் விடயங்களைக் கவனத்திற் கொண்டு உமக்கு முன்னால் வைக்கப்பட்டுள்ள பொருள்தொகுதியை வரைந்து வர்ணந்தீட்டுக.

✳ கடதாசிப் பரப்பினைப் பொருத்தமானவாறு பயன்படுத்திச் சித்திர ஒழுங்கமைப்பினைச் செய்க.

✳ பொருள்களின் இயல்பு, வெளிப்புறத் தன்மை, பரிமாணம், கண்மட்டம், முப்பரிமாண இயல்பு, தூரதரிசனக் கோட்பாடுகள் ஆகியன பற்றிக் கவனத்திற் கொள்க.

✳ பொருள்தொகுதி உமக்குத் தெரிகின்ற விதத்தில் வரைந்து அதன்மீது ஒளி, இருள் விழுகின்ற தன்மையைக் கவனத்திற் கொண்டு வர்ணந்தீட்டுக.

✳ வர்ண ஊடகங்களைக் கையாளுகின்ற நுட்பமுறைகளைப் பொருத்தமானவாறு பயன்படுத்துக.

✳ பொருள்தொகுதிக்குப் பொருத்தமான வர்ணப் பின்னணியைப் பயன்படுத்துக.

✳ பொருள்தொகுதி வைக்கப்பட்டுள்ள பலகையின் அளவைப் பொருள்தொகுதிக்குப் பொருத்தமானதாக மாற்றிக் கொள்ள முடியும்.

✳ நீர் வர்ணம், போஸ்ரர் வர்ணம், தூள் வர்ணம், பஸ்ரல் வர்ணம் அல்லது இவ்வூடகங்களைக் கலந்தும் பயன்படுத்திக் கொள்ளலாம்.

✳✳✳

පැරණි නිර්දේශය/ பழைய பாடத்திட்டம்/ Old Syllabus

OLD



අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

චිත්‍ර කලාව III
சித்திரக்கலை III
Art III

51 T III

13.08.2019 / 0830 – 1140

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
*Three hours*

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

**அறிவுறுத்தல்கள் :**

- கீழே தரப்பட்டுள்ள **அ, ஆ, இ** ஆகிய பகுதிகளிலிருந்து **ஒரு** தலைப்பை மாத்திரம் தெரிவுசெய்து, **வர்ணச் சித்திரம்** ஒன்றை வரைக.
- உமது **சுட்டெண்ணையும்** தெரிவுசெய்த **வினாவின் இலக்கத்தையும்** சித்திரம் வரையும் தாளின் **மறுபக்கத்தில்** தெளிவாக எழுதுக.
- சித்திரத்தைக் கையளிக்கும்போது அது உலர்ந்திருத்தல் அவசியமாகும். ஈரமான சித்திரங்கள் ஒன்றுடனொன்று ஒட்டிக்கொள்வதற்கு வாய்ப்புள்ளமையினால் அது உமக்குப் பாதகமானதாக அமையலாம்.
- விரும்பிய வர்ண ஊடகம் ஒன்றையோ அல்லது ஊடகங்கள் சிலவற்றைக் கலந்தோ பயன்படுத்திக் கொள்ளமுடியும். (நீர் வர்ணம், போஸ்ரர் வர்ணம், தூள் வர்ணம், பஸ்ரல் வர்ணம் அல்லது சிலவற்றின் கலவை)
- தேவைப்படுவோருக்குத் திசுத்தாள் வழங்கப்படும்.

## பகுதி - அ

### சித்திர ஒழுங்கமைப்பு

❒ பின்வரும் தலைப்புகளில் ஏதேனும் ஒன்றை மாத்திரம் தெரிவுசெய்க.

1. இரவில் இடம்பெறும் சமய நிகழ்வொன்று
2. மாலைவேளையில் கடற்கரையில் மகிழ்ந்திருக்கும் ஒரு குழுவினர்
3. கிராமிய வாராந்த சந்தையொன்று அல்லது நகர்ப்புறச் சந்தையொன்று

## பகுதி - ஆ

### அலங்கார ஆக்கம்

❒ பின்வரும் தலைப்புகளில் ஏதேனும் ஒன்றை மாத்திரம் தெரிவுசெய்க.

4. குழந்தைகளின் பயன்பாட்டுக்குப் பொருத்தமான துணியொன்றை அச்சிடுவதற்கேற்ற பரவல் அலங்காரமொன்றை நிர்மாணிக்குக. (பரவல் தொடர்பில் கவனம் செலுத்துதல் வேண்டும்.)
5. மரபுரீதியான அலங்காரங்களைக் கொண்டு குஷன் (Cushion) உறையொன்றுக்குப் பொருத்தமான $9 \times 9$ அங்குல அளவுடைய முழுத்தள அலங்காரமொன்றை நிர்மாணிக்குக.
6. வரவேற்பறைக்குப் பொருத்தமான நவீன பாணியிலான $8 \times 6$ அடி அளவுப்பிரமாணமுடைய சுவர்ச் செதுக்கலொன்றை நிர்மாணிக்குக. (கடதாசிப் பரப்புக்கு ஏற்ற விதத்தில் சிறிதாக்கிக் கொள்க.)

[பக். 2 ஐப் பார்க்க

## பகுதி - இ

### கிறபிக் சித்திர ஆக்கம்

❒ பின்வரும் தலைப்புகளில் ஏதேனும் ஒன்றை மாத்திரம் தெரிவுசெய்க.

**7.** சமூக அமைதியைச் சித்திரிக்கும் வர்ணச் சுவரொட்டியொன்றைத் திட்டமிடுக.

**8.** பிரபல்யமானதொரு ஓவியக்கலைஞர் பற்றி எழுதப்பட்ட நூலொன்றுக்கான மேலட்டையொன்றைத் திட்டமிடுக. (முதற் பக்கம், தடிப்புப் பகுதி, இறுதிப்பக்கம் ஆகியன உள்ளடக்கப்படுதல் வேண்டும்.)

**9.** இலங்கையிலிருந்து ஏற்றுமதி செய்யப்படும் தேயிலைப் பைக்கற்று ஒன்றுக்குப் பொருத்தமான திட்டமொன்றைத் தயாரிக்குக. (அளவு, வடிவம் ஆகியவற்றை விருப்புக்கேற்றவாறு தீர்மானித்துக்கொள்க.)

* * *